# ஆசார்ய தேவோ பவ

# आचार्य देवो भव



## குரு பூர்ணிமாதான்

## நமது ஆசிரியர் தினம்

வெளியீடு : 7

வெளியிடுவோர் :
**விவேக பாரதி**
சென்னை – 600 017
தொடர்புக்கு : 9952959072

தொகுத்தவர் :
ஆர்.பி.வி.எஸ். மணியன்




# எது ஆசிரியர் தினம்?

வ்யாஸ பூர்ணிமா எனப்படும் ஆஷாட பௌர்ணமி நாள்தான் ஆண்டுதோறும் நாம் கொண்டாட வேண்டிய ஆசிரியர் தினம் ஆகும்.

குருவிற்கு மரியாதை செய்யும் நாள் இதுதான்.

இந்த நாள் பாரம்பரியத்தோடு ஒட்டிய பண்பாட்டிற்கியைந்த ஆசிரியர் தினம்.

இந்த நாள் க்ருஷ்ண த்வைபாயனர் எனும் வியாஸரோடு சம்பந்தப்பட்ட நாள். இவர்தான் பரா வித்யா - அபரா வித்யா இரண்டுடனும் சம்பந்தப்பட்டவர்.

நமது தேசத்தின் அனைத்துக் கல்வி நிலையங்களிலும் வ்யாஸ பூர்ணிமா தினத்தை ஆசிரியர் தினமாக கொண்டாடுவதே சாலப் பொருத்தமாகும்.

அன்று ஆசிரியர்களுக்கு வ்யாஸரின் பெயராலேயே விருதுகள் வழங்கி கௌரவிப்பதே நல்லது.

இந்த நாளை ஆசிரியர்களைப் போற்றும் நாளாகக் கொண்டாடினால் ஆசிரியர்களுக்கும் அந்தக் காலத்திய ஆசார்யர்களைப் போன்று ஒழுக்கத்தில் சிறந்தவர்களாக வாழவேண்டும் என்ற உணர்வு தோன்றும்.

மாணாக்க உலகிற்கும் ஆசிரியர்களிடத்தில் சிரத்தையும் பக்தியும் மிகும்.



# காஞ்சி மஹா பெரியவர்

**தெய்வத்தின் குரல், பாகம்-7, பக்.129**

வருங்காலப் பிரஜைகளின் அறிவை மேம்படுத்தும் கல்வி என்ற உத்தமமான தொழில் தங்களுக்கு வாய்த்திருப்பதன் அருமையை, அருமை பெருமையை ஆசிரியர்கள் உணர்ந்து ஆசிரியத் தொழிலை ஒரு ஆராதனையாக ஆற்ற வேண்டும்.

கல்வித் தரம் குறையாமல் காப்பாற்றுகிற காவலர்களாக அவர்கள் இருக்க வேண்டும். அந்தத் ''தரம்'' பாட திட்டத்தோடு முடிந்துவிடும் விஷயமல்ல; வாழ்க்கையில் ஸத்குணமுள்ள ஸத்பிரஜைகளை உண்டாக்க வழி செய்தாலே கல்வியானது நிஜமான தரத்தைப் பெற்றதாகும்.



சிற்பி சிலை செதுக்குவதைப் பார்த்திருக்கிறீர்களா. ஒரு பெரிய கல்லில் தான் வடிக்க இருக்கும் உருவத்தை தன் மனதிலும் அந்தக் கல்லிலும் பதித்துக்கொண்டு தேவையற்ற பிற பகுதிகளை வெட்டி விடுகிறான்.

இதோ சிலை தயார்.

இதுவேதான் நல்ல மனிதர்களை உருவாக்க ஆசிரியர்கள் செய்ய வேண்டியது. மாணாக்கர்களிடம் உள்ள தேவையற்ற குணங்களை நீக்கிவிட்டால்



நற்குணங்கள் கொண்ட நல்ல மனிதர்கள் உருவாகிறார்கள்.





நமது பண்பாட்டில் ஆசிரியராக இருப்பது ஒரு தொழில் புரிவது அல்ல. அது ஒரு உறவு.

**மாதா, பிதா, குரு, தெய்வம் இவை எல்லாமே நமது உறவுகள்தாமே.**

Teaching is not just a noble profession. It is a sacred relationship between the Teacher and the Taught.



உடன் படிக்கும் மாணவன் வகுப்பு கட்டணம் (Fee) கட்ட முடியாவிட்டால் மற்ற மாணவர்கள் தங்களுக்கு கிடைக்கும் Pocket moneyயிலிருந்து கொஞ்சம் கொடுத்து உதவி செய்தால் எவ்வளவு நன்றாகயிருக்கும் !

# No Private Tuition



There are many teachers who take to private tuition in addition to their legitimate schoolwork. Money is the motivation that prompts the teacher into this lapse.

The sanctity of education gets tainted by this practice and by the unwholesome attitude behind. Private tuition is thus a prostitution of the teacher's ennobling mission.

Swami Chidbhavananda

நன்னிலம் வட்டம்
விஷ்ணுபுரம் வரலாற்று ஆசிரியர்
சுப்பிரமணியை எடுத்துக் கொள்ளுங்களேன்.
பணி ஓய்வு பெற்ற பிறகும் அரசு மகளிர் மேனிலைப்
பள்ளியில் பிளஸ் டூ பிள்ளைகளுக்கு வரலாற்றுப் பாடம்
எடுக்கிறார். இலவசமாக, பெற்றோர் – ஆசிரியர் சங்கம்
அவருக்கு மதிப்பூதியம் வழங்க முன்வந்தபோது
மறுத்துவிட்டு சொன்னார்: "என் வாழ்க்கையின் இந்த
கட்டத்தில் பாடம் நடத்துவதை நான் என் தர்மமாக
கருதுகிறேன்" (என்கிறது 2003
ஜனவரி 27 தினமணி).

# எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்

அக்ஷராப்யாஸம் ஒரு ஸம்ஸ்காரம். குழந்தைகளுக்கு எழுதக் கற்றுத் தரும் நாள். எழுதுவது இறைவன் திருநாமமாக இருக்க வேண்டும். ப்ரணவத்தோடு கூடிய பகவானின் நாமத்தை எழுதப் பழக்கினால் கல்வியில் சிறந்து விளங்குவார்கள்.

அக்ஷராப்யாஸம்





# கற்பவர் வகைகள்



நம் அனைவருக்கும் ஐம்புலன்கள் (காது, கண், மூக்கு, நாக்கு, தோல்) மூலம் தான் விஷயங்கள் மூளைக்குச் சென்று அங்கு நடக்கும் ஆய்வுக்குப் பின் கருத்துக்களாக மாறுகின்றன. இது அனைவருக்கும் பொதுவான போதிலும் ஒரு குறிப்பிட்ட ஆசிரியர் நடத்தும் பாடத்தையே கூடச் சில மாணவர்கள் நன்றாகப் புரிந்து கொள்கின்றனர். சிலர் சிரமப்படுகின்றனர். சிலருக்குப் புரிவதே இல்லை. இது ஏன்?

சிலர் கண்ணால் ஒரு முறை பார்த்தாலே போதும். உடனே புரிந்து கொள்வார்கள்.

அவர்கள் காட்சி படிப்பாளிகள் (visual learners). சிலர் உரக்கப் படித்தாலோ அல்லது பிறர் கூறக் கேட்டாலும் போதும். நினைவில் தக்க வைத்துக் கொள்வார்கள். இவர்கள் செவிப் படிப்பாளிகள் (auditory learners). சிலர் நடந்து, கைகால்களை வீசிக் கொண்டு படித்தால்தான் நினைவில் நிற்கும். அப்படிப் பட்டவர்களை நாம் செயல்வழி





கற்பவர்கள் (kinesthetic learners) என்கிறோம். நீங்கள் எப்படிப்பட்ட படிப்பாளி என்பதைக் கண்டுபிடியுங்கள். அதையே பின்பற்றுங்கள்.

நீங்கள் குழந்தையாக இருக்கும்போது உரக்கக் கத்திப் படிப்பதை வீட்டில் உள்ள அனைவரும் வரவேற்பார்கள். ஆனால் பெரியவர் களான பிறகு அலுவலகத்தில் முக்கியமான விஷயங்களைக் கத்திப் படிப்பதை எப்படி ஏற்றுக் கொள்வார்கள்? ஆகையினால் சிறுக சிறுக மற்ற முறைகளில் கற்கவும் தயார் படுத்திக் கொள்ளுங்கள்.

பள்ளியில் படிப்பதை நினைவில் வைத்துக் கொள்ள சிரமப்படும் நாம் எப்படி திரைப்படக் கதையை, வசனத்தை, பாட்டை, நடிகரின் பெயரை நினைவில் வைத்துக் கொள்கிறோம்? அவை பல வண்ணங்களில், சப்தங்களில், நடிப்புக்களில் நம் கண், காது வழியாக நுழைந்து விடுவதால்தான் நினைவில் நிற்கின்றன. அது போன்ற பல ஊடக முயற்சியைப் படிப்பில் நுழைத்து விட்டால் பாடத்தைக் காட்சியாக்கி (visualize), அதைப் பற்றிப் பேசி (hearing) அதையே நடித்தும் (kinesthetic) படித்தால் பாடங்கள் மனதில் நிலைத்து நிற்கும். கண், காது வழியாக மூளைக்குச் சென்று தற்காலிக நினைவில் நின்று பிறகு நிரந்தர நினைவில் தங்குதல் கூடும்.

## செவி வழி படிப்பாளிகள்

⌘ காதால் கேட்டும், பிறருடன் பேசியும் கற்பர்.

⌘ குழு பேச்சுக்களில் மிகவும் சமர்த்தர்கள்.

⌘ ஒலியிலேயே அதிக ஆர்வமும் கவனமும் கொண்டிருப்பர்.

⌘ பேசுவதிலும் கேட்டல் மூலம் கற்பதிலும் தான் அதிக கவனம் செலுத்துவார்கள்.

⌘ இவர்கள் தேர்ந்த குரல் வளத்துடன் பாடகர்களாக, புலவர்களாக, பேச்சாற்றல் மிக்க ஆலோசகராக ஆசிரியர்களாகப் பரிணமிப்பர்.

## காட்சி / விழி வழி படிப்பாளிகள்

⌘ எழுத்துக்கள், பார்வை, கண் வழி காணும் காட்சிகள் மூலமே இவர்களது கல்வி மேம்படும்.

⌘ தனியாகப் படிப்பதில் சிறந்திருப்பர்.

⌘ ஒவ்வொரு வார்த்தையையும் குறிப்பெடுப்பதில் ஆர்வம் காட்டுவர்.

⌘ படிக்கும்போதே தேர்வுக்கு ஏற்ற குறிப்பெடுப்பர்.

⌘ படங்கள், கிராஃப்களை அதிகம் பயன்படுத்துவர்.

⌘ இவர்கள் ஓவியம், எழுத்து, கவிதை விமர்சனம், பத்திரிக்கைத் துறைகளில் பரிணமிப்பர்.

## செயல்வழி படிப்பாளிகள்

⌘ செய்கை, அசைவு, நடத்தல், நடித்தல் மூலம் கற்றுக்கொள்வர்.

⌘ எப்போதும் கைகால்கள் அசைந்து கொண்டே இருக்கும்.

⌘ படிப்பை விட படைப்பில் ஆர்வம் அதிகம்.

⌘ கையில் எதாவது ஆயுதங்களை வைத்துக் கொண்டு செயல் வீரர்களாகவே இருப்பர்.

⌘ பொருட்களைப் பிரித்து இணைப்பது, பழுது பார்ப்பது இவற்றில் அதிக ஆர்வம்.

⌘ செயல் திட்டங்களில் (Project work) சிறந்து இருப்பர்.

⌘ பின்னாளில் நடிப்பு, நடனத்தில் சிறப்படைவர். விளையாட்டு வீரர், அறிவியல் ஆய்வாளர், இசைக் கருவி இயக்குபவர், கனரக வாகன ஓட்டி எனப் பரிணமிப்பர்.



## பிற வகை படிப்பாளிகள்

நாம் எவ்வகைப் படிப்பாளிகள் என்பதை அறிந்து கொள்வது நமக்கு அவசியம். ஏனென்றால் செவி வழி படிப்பாளிக்குக் குறிப்பெடுத்தல் மிக கடினம். கண்வழி / காட்சிப் படிப்பாளிக்குக் கூட்டுப்படிப்பு (combined studies) வேப்பங்காய். உரக்கப் படிப்பவர்கள் மற்றவர்கள் படிக்கும்போது காதால் கேட்டே தேர்வைமிக எளிதாக எழுதி விடுவார்கள். உள்ளுணர்வு படிப்பாளிகள் (intutive learners) பரந்த / பல்வகை படிப்பாளிகள் (global learners) வரிசைக் கிரமப் படிப்பாளிகள் (sequential learners) எனப் பலவகை படிப்பாளிகள் உள்ளனர். எனவே உங்கள் கனவு நனவாக எந்த முறையில் வேண்டுமானாலும் படிக்கலாம். படிப்பதுதான் முக்கியமே தவிர எவ்வழி என்பது அல்ல. படிப்பிற்கு அவசியம் குறிப்பு எடுத்தலைக் கற்குமுன் கற்றல் திறன்களை அறிதல் மிக அவசியம்.

# To succeed in your Education

# You Need 7Rs

1. Read/Recite - படித்தல்
2. Recollect - சொல்லிப்பார்த்தல்
3. Recapitulate - நிரல் வரிசையில் நினைவில் கொண்டு வருதல்
4. Reproduce - திரும்ப எழுதிப் பாத்தல்
5. Refer - எழுதியதை ஒப்பிடுதல்
6. Rectify - தவறுகளைத் திருத்துதல்
7. Realise - மீள் பார்வை

நம்முடைய வாழ்முறையைப் பாழ்படுத்தி வந்த வெள்ளைக்காரர்கள் நடத்தி வந்த கல்வி திட்டம் ஸ்வராஜ்யம் வந்த பின் மாற வேண்டும் என்று ஆசைப்பட்டோம். மாறவும் மாறிற்று. முன்னைவிட மோசமான கல்வி முறையாக. இதில் கல்வியும் இல்லை; முறையும் இல்லை. ஏன் மூளைக்காவது சரக்கு ஏற்று கிறார்களா என்றால் அதுவும் இல்லை. யோக்யதாம்சம் என்பதைப் பின்னுக்குத் தள்ளி ஜாதி, பணபலம், மிரட்டல் என்கிறவற்றை வைத்து கல்வி, பட்டம் என்றால் வேறே எப்படி இருக்கும்? டொனேஷன் கொடுத்து அட்மிஷன் பெறுவது, லஞ்சம் கொடுத்து பாஸ் போடப் பண்ணுவது, வோட்டை பற்றியே யோஜனை பண்ணிக் கொண்டு நாளுக்கு நாள் ஜாஸ்தியாக்கிக் கொண்டிருக்கும் ரிஸர்வேஷன் என்று ஏற்பட்டிருப்பதைப் பார்க்கும் போது இந்த தேசத்தில் தர்ம நியாயமான கல்வி முறை நடக்கிறதா, நடக்குமா என்பது கேள்வியாயிருக்கிறது.



**காஞ்சி மஹா பெரியவர்**

தெய்வத்தின் குரல், பாகம்-7, பக்.129



# அன்றே சொன்னான் பாரதி



உங்களுடைய கிராமத்தில் ஒரு பாடசாலை ஏற்படுத்துங்கள். தேச பாஷையின் மூலமாக அதாவது நமது தமிழ்நாட்டில் தமிழ் மூலமாக கல்வி போதிக்க வேண்டும். இந்தப் பாடசாலைகளில் தேசீயக் கல்வி போதிக்கப்பட வேண்டும்.

உபாத்தியாயர்களாக நியமிக்கப்படுவோர் திருக்குறள், நாலடியார் முதலிய நூல்களில் தகுந்த பழக்கம் உடையவர்களாக இருக்க வேண்டும். சிறந்த ஸ்வதேச அபிமானமும் ஸ்வதர்ம அபிமானமும், எல்லா ஜீவர்களிடத்திலும் கருணையும் உடையவர்களை, தேசபக்தி முதலிய உயர்ந்த குணங்கள் உள்ளவர்களை உபாத்தியாயர்களாக நியமிக்க வேண்டும்.



## நியமிக்க வேண்டாமே

1. புகை பிடிப்பவர்களை ஆசிரியர்களாக நியமிக்கக் கூடாது.
2. எப்போதாவது எங்கேயாவது மதுபானம் அருந்துபவராக இருந்தாலும் ஆசிரியராக நியமிக்கக்கூடாது.
3. இரு பால் மாணவர்கள் பயிலும் கல்விக் கூடங்களில் பெண்பால் ஆசிரியர்களை மட்டுமே நியமிக்கவேண்டும்.
4. தமிழ் பேசும்போது 'ழ'கர உச்சரிப்பு 'ன'கர 'ண'கர 'ல'கர 'ள'கர உச்சரிப்புகள் சரிவர வராதவர்கள் தமிழ் ஆசிரியர்களாக நியமிக்கப்படக் கூடாது.

# Will you skip a meal to feed these children?







சமுதாய உணர்வூட்டாத கல்வியால் பயனில்லை. சமுதாயத்தின் வரிப்பணத்தில் படிக்கிறோம் என்ற உணர்வே இல்லாமல் தறுதலைகளாக திரியும் மாணவர்களுக்கு இடையே சமுதாய உணர்வோடு செயல்படும் மாணவர்களும் உள்ளனர்.

துல்ஜாபூரில் உள்ள டாடா சமூக இயல் கல்லூரி மாணவர்கள் வாரத்திற்கு ஒரு வேளை தியாகம் செய்து அதன் செலவில் அருகில் உள்ள ஆதரவற்றோர் இல்ல மாணவர்களுக்கு சனிக்கிழமை தோறும் சத்துணவு தருகிறார்கள். இதனால் பயன்பெறும் மாணவர்கள் 250 பேர். அவர்களுக்கு இலவசமாக பாடங்களும் நடத்துகிறார்கள்.





# குஜராத்தில் ஒரு 'குரு' கிராமம்



In a country where most parents want their children to become engineers, doctors and high-flying corporate executives, a self-assured village 90 km from Ahmedabad prides itself in producing teachers. In Hadiyol, one in every four persons is either a teacher or has taught in the past. And its penchant for pedagogy has justifiably earned it the sobriquet "Teachers' Village."

Located about seven km from Himmatnagar, the headquarters of Sabarkantha district, Hadiyol has more than 700 active and 200 retired teachers. It is said one can find atleast one teacher from Hadiyol in each of Gujarat's 33 districts. Atleast 15 families have 10 or more members who have taught in schools over three generations, each of which can fill up any decent-sized staffroom in a school.

The concentration of gurus has a bearing on the village's character. Village sarpanch Alpit Nayi points out that Hadiyol seldom records any crime. Most people shun liquour and tobacco. "There are many instances of families supporting the education of farm labourers' kids. Villagers are also actively aware of matters compared to those in nearby villages. It is wonderful that the village is now known across the state through our teachers," he said.



நமது ராஷ்ட்ரத்தின் பாரம்பரியப் பண்பாட்டு ஞானமும், சமுதாய உணர்வுமே இன்றைய மாணவர்களுக்கு நாம் ஊட்ட வேண்டுவது. ராஷ்ட்ரத்திற்காக உழைத்தல்; தேவையானால் அதற்காகத் துன்பங்களையும் ஏற்கத் தயாரான மனோபாவத்தைப் பெறுதல் - இவையே பாரதீய கல்வியின் லக்ஷ்யமாக அமைய வேண்டும்.



HUNDREDJEE R. SRINIVASAN

தேச பக்திப் பாடல்

# जय जय भारतदेश

जय जय भारतदेश जयत्वं जय जय भारतदेश ।
नत्वा रुद्रं कैलासेशं ताण्डव कर्तारं
ध्यात्वा रामं धनुर्धारिणं रावणहन्तारं
स्मृत्वा कृष्णं चक्रधारिणं कंसच्छेत्तारं
प्रणम्य सर्वान् पराक्रमध्वं, घोषयध्वम्, घोषयध्वम्
॥ जय ॥

जयतु हनूमान् लङ्कादग्धा द्रोणाचलधारी
जयतु प्रतापो राणावीरो गिरिकन्दरवासी
जयतु शिवाजी झान्सीलक्ष्मीः देवी रणचण्डी
प्रणम्य सर्वान् पराक्रमध्वं, घोषयध्वम्, घोषयध्वम्
॥ जय ॥

गङ्गायमुनाब्रह्मपुत्रनदगण्डकपावनवारि
कृष्णागोदासिन्धुनर्मदाः तां सरयूं कावेरीं
सह्यसप्तपुट विन्ध्यहिमाचलम् उन्नतशृङ्गसुशोभं
प्रणम्य सर्वान् पराक्रमध्वं, घोषयध्वम्, घोषयध्वम्
॥ जय ॥

## தேச பக்திப் பாடல்

# ஜய ஜய பாரததேச

ஜய ஜய பாரததேச ஜயத்வம் ஜய ஜய பாரததேச |
நத்வா ருத்ரம் கைலாஸேஷம் தாண்டவ கர்தாரம்
த்யாத்வா ராமம் தனுர்தாரிணம் ராவணஹந்தாரம்
ஸ்ம்ருத்வா க்ருஷ்ணம் சக்ரதாரிணம் கம்ஸச்சேத்தாரம்
ப்ரணம்ய ஸர்வான் பராக்ரமத்வம், கோஷயத்வம்,
கோஷயத்வம் (ஜய)

ஜயது ஹனுமான் லங்காதக்தா த்ரோணாசலதாரீ
ஜயது ப்ரதாபோ ராணாவீரோ கிரிகந்தரவாஸீ
ஜயது சிவாஜி ஜான்ஸிலக்ஷ்மீ: தேவீ ரணசண்டீ
ப்ரணம்ய ஸர்வான் பராக்ரமத்வம், கோஷயத்வம்,
கோஷயத்வம் (ஜய)

கங்காயமுனாப்ரஹ்மபுத்ர நதகண்டக பாவனவாரி
க்ருஷ்ணா கோதா ஸிந்து நர்மதா: தாம் ஸரயூம்
காவேரீம்
ஸஹ்யஸப்தபுட விந்த்ய ஹிமாசலம் உன்னதச்ருங்க
ஸசோபம்
ப்ரணம்ய ஸர்வான் பராக்ரமத்வம், கோஷயத்வம்,
கோஷயத்வம் (ஜய)



இந்தப் பிரசுரம்
ஸத்வித்யா ஸ்தானம்
அறக்கட்டளை
நிதி உதவியுடன்
வெளியிடப்படுகிறது.